

# மதுரை ஸ்ரீ பரிபூர்ண விநாயகர் வரலாறு



வெளியிடுவோர்:

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்

32, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை-1.

(தொலைபேசி: 34600)

1973

# மதிப்புரை

N L.C. துவக்கப் பள்ளி,
நகர் பிரிவு-18, நெய்வேலி-3.

சே. சு. சென்றுயன்
தலைமை ஆசிரியர்.

விநாயகப் பெருமான் உலகத்தின் முழு முதற் கடவுள் என்பதையும், ஓங்காரத்தின் (ப்ரணவ) சொரூபம் என்பதையும் யாவரும் அறிவர். எக்காரியத்தை முதன் முதலில் துவக்கினுலும் கணபதியை வழிபட்டே துவக்குவர்.

"தெய்வம் ஒன்றே. அதன் பேதம் அனந்தம்", என்பது தாயுமானவர் கூற்று. தெய்வம் பற்பல காலங்களில் அவசியம் ஏற்பட்ட சமயங்களில் பல ஞான உருவம் கொண்டு எழுந்தருளி நமக்குச் செந்நெறி காட்டி, வாழ்வாங்கு வாழவும், பிறவியின் பெரும் பயனை அடையவும் வழி காட்டுகின்றது. இத்தகைய ஒரு பெரு வாய்ப்பே சென்ற நூற்றுண்டில் நிகழ்ந்த **மதுரைப் பரிபூர்ண விநாயகர்** தோற்றம் ஆகும்.

**குருநாதர்** எனப்போற்றி தொன்மை வாய்ந்த பல சீரிய நடைமுறைகளைப் பின் பற்றி 'சட்டம்' என அதனைக் கடைபிடித்து வரும் பல்லாயிரக் கணக்கான அடியவர்களின் "வழி காட்டும் வான் பொருளாய்", விளங்கும் ஸ்ரீலஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகளுக்கு விடியற் காலையில் மதுரை மாநகரில் வைகை நதியின் தென்கரையில் திருக்காட்சி அளித்து பரிபூரண விநாயகராக அமைந்து இன்றும் திருவருள் பாலித்து வருகின்ற பெருமானின் வரலாற்றை இவ்விலக்கியப் பதிப்பகத்தார் வெளியிடுவது வரவேற்கத் தக்கது.

மன நோய் மல்கியும், மாசுமறுவற்ற வாழ்க்கை நடத்தும் நெறி அறியாமலும் தவிக்கின்ற மன்னுயிர் வகைகட்கு இப்புத்தகம் பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

இதனை கண்ணுறும் அன்பர்கள், உற்றுர் நண்பர்களுக்கு அறிவித்தும், செந்நெறியினைக் கைக்கொண்டும் பெருநிலையை எய்துமாறு வேண்டுகிறேன்.

நெய்வேலி-3
16-1-73

சே. சு. சென்றுயன்

ஓம்



# அணிந்துரை

'மதுரை ஸ்ரீ பரிபூரண விநாயகர் வரலாறு' என்னும், பொற்சிறுப் பெட்டகம் போன்ற, சிறுநூல் முழுமையும் படித்து மகிழ்ந்தேன். இதனை எழுதியவர் தொ. ஜெ. குபேந்திரன் என்னும் என் இளைய நண்பர். இச்சிறு வயதிலேயே இவர் இரெட்டியப்பட்டி அடிகளாரின் சட்டப் பெருநெறியில் சற்றும் வழுவாது ஒழுகிவரும் திருவுடையராய், குருவருளின் அன்பாதரவுக்கும், அரவணைப்புக்கும் உரியவராகி வருவதை நான் கண்டு கண்டு களிப்பெய்துவேன்.

இவருடைய கல்வியறிவு, தமிழாற்றல், இவற்றை நான் நன்கு அறிவேன். இவரால் இந்நூலை எப்படி எழுத முடிந்தது என்று வியந்த வண்ணம் இருக்கின்றேன்.

"முன்னவனே முன் நின்றால் முடியாத பொருள் உளதோ"? என்பது மறையுரை. இவ்வுரை இவ் இளந் திருவினர்பால் எத்துணை உண்மையாகிவிட்டிருக்கிறது என்பதை யுன்னி யுன்னி உளம் பூரிக்கின்றேன்.

என் போற்றற்குரிய எழிற்பெருந்துறவியார், அருள்வளம் ஆளும் அருட்கவி சாதுராம் அடிகளார் அவர்கள், இவ் வாசிரிய இளஞ் செல்வர்க்கு, இந்நூலை உறுபொருளும், உரை வளமும் கொண்ட இவ்வடிவில் உருவாக்குவதில், குரு முதல்வராக விளங்கியுள்ளார்கள் என்பதை உணர்ந்து, அவர்களுக்கும் என் பரிவார்ந்த பாராட்டினைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திருவருளும் குருவருளும் ஒருங்கிணைந்து உடன் நிற்குமானால், இந்நிலவுலகில் ஆகாத பொருள் எது உண்டு? முற்று மார்ந்த முழுமை எய்துவதற்கு அங்கயற்கண்ணியின் அருந்திருவருளும், அத்திருவருளின் வியன் மிக்க விளைவான முன்னவனாரின் குருவருளும் ஒன்று சேர்ந்தன்றோ, வழி காட்டும் வான் பொருளாக இயங்கி வரும் இரெட்டியப்பட்டி அடிகளாரை, இக்காலத்திற்கு இன்றியமையாத துணையான, குருபரனாராக நமக்கு அளித்திருக்கின்றன. இவ்வுண்மையை இந்நூல் இனிது மிளிர வைக்கின்றது.

பொதுவாக முன்னவனரின் முழுமுதல் தன்மையையும், சிறப்பாக அவர் மதுரையில் நம் குரு பிரானரை ஆட்கொண்டு, அப்பிரானராகவே அருளுருக் கொண்டு, அருட்சட்ட நெறியை நமக்கு அளித்தருளிய மேன்மை மிக்க மாணிக்கப் பரல்களையும் இப்பொற் பெட்டகம் தன்னகத்தே கொண்டு ஒளி வீசுகின்றது. இதனைப் போற்றிப் படித்துப் பயன் பெறுக! இவ்வையகம், என இயம்புவது எனது இனிய கடமையாகின்றது,

இந்நூலை அச்சிட்டு வழங்குபவர்கள் இரெட்டியப்பட்டி அடிகளார் இலக்கியப் பதிப்பகத்தார் ஆவார்கள். இப்பதிப்பகத்தை இனிது அமைத்து, இரெட்டியப்பட்டி அடிகளாரின் அருட்சட்டத்தைப் பலரும் அறிந்து, பின்பற்றி யொழுகிப் பிறவிப் பெரும் பிணி நீங்கப் பெறுவதற்கும், இம்மை நலங்கள் யாவும் நன்மையுறப் பூண்பதற்கும், பெருந்துணையாக, குரு பெருமானின் அருள் வளங் கொழிக்கும் செய்திகளைச் சென்னையிலும், வெளியூர்களிலும், பல அறிஞர்களைக் கொண்டு விளம்பி வருவதுடன், அவ்வரிய செய்திகளை, அழகு அழகான வடிவங்களிலே, சிறுசிறு நூல்களாக எழுதி வித்தும், வெளியிட்டும், அருந்தொண்டு புரிந்து வருகின்ற இல்லறத் துறவியார், என் அரிய நண்பர் திரு. தொ. ஜகன்னத குப்தா அவர்கள் ஆவார்கள். அவர்களுக்கும், அனைவரின் பாராட்டும் பெரும் பங்கு உரியதாகும்- நீடு நிலவுக அவர்கள் நாடிடும் பணி!

" தந்தை மகற்கு ஆற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல் '

என்னும் மறை மொழியைச் செயலாக்கிய பெருமை என் நண்பருக்கு வாய்த்திருக்கிறது. அதற்காகவும் தனியே அவர்களைப் போற்றி, இத்தகைய அருள் நூல்களை மேலும் மேலும் அவர்கள் அச்சிட்டு வழங்கி, அருகிக் கிடக்கும் அருளாற்றல், இது போது, இந்நிலவுலகில், இலங்கி, மக்களின் இன்னல்களைக் களைந்து இன்ப வாழ்வு வாழ வகை வகுப்பதற்கு ஆவன யாவும் செய்து வருமாறு இறையருளை இறைஞ்சுகிறேன்.

" தமிழ் மணம் "
சென்னை-30.

**கீ. இராமலிங்கம்**
20—2—1973

ஓம் ஸ்ரீ பரிபூரண விநாயகர் துணை



# ஆசிரியர் உரை

**T.J. குபேந்திரன் (D.H.M.C.T.)**
கௌரவச் செயலாளர்,
ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்
*32, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை-1.*

ஸ்ரீ மதுரைப் பரிபூரண விநாயகர் வரலாற்றைப் பற்றி எழுத தெரியாத என் உள்ளத்தில், ஓர் நாள் திருவருள் குடி புகுந்து எழுதி வைத்த ஒரு வரலாற்றை இங்குத் தங்கள் முன்னர் சமர்ப்பிக்கிறேன். இதில் உள்ள சாராம்சங்களை மட்டும் மனதில் கொள்ள வேண்டும் என என் குருநாதராகிய ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளைப் பிரார்த்திக்கிறேன். மேலும் இக்கட்டுரை எழுதுவதற்குத் தூண்டுகோலாக நின்றவர் உயர் தவத்திரு இளந்துறவியார் சாதுராம் சுவாமிகளே ஆவர் என்பதை இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்படிக்கு,

18-1-1973

**T. J. குபேந்திரன்.**

# உள்ளுறை

ஸ்ரீ பரிபூரண விநாயகர் துணை



# ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் அருட் பாடல்

## ஸ்ரீ பரிபூரண விநாயகர் துதி

### நேரிசை வெண்பா

ஐந்து கரத்தாய் அறுமுகற்கு நேர்மூத்தாய்
முந்த வுதித்த முதல்வா வென்—சிந்தை
குடியிருந்தே காக்குங் கோமா னுனையான்
அடிதொழுதேன் வந்தென்னை யாள்

இராசவிருட் சஞ்சிவமா யின்வேம்பு சத்தியதாய்
ஆசையுடன் வந்தே யமைந்து வெகு-நேசமுடன்
புத்திரனைப் பெற்றாரிப் பூதலத்தி லெல்லோரும்
முத்தி பெற வென்றே முதல்.

### இன்னிசை வெண்பா

மதுரா புரிவடக்காய் வைகைநதித் தென்பாற்
சதுரார் ரயில்பாலந் தன்மேற்கா யெங்குங்
கதித்தோக்குஞ் செந்நெல்சூழ் கட்டிடத்தின் கீழ்பால்
உதித்தாயென் னுள்ளத் துறை.

நன்றி :—வழிகாட்டும் வான் பொருள் புத்தகம்

# ஸ்ரீ மதுரைப் பரிபூர்ண விநாயகர் கீர்த்தனை

ராகம் : "முருகா குஹா" மெட்டு தாளம் : ஆதி

**பல்லவி**

மதுராபுரிப் பரிபூரணா ! மதுராலயன் மகனே ! மஹா
(மதுரா)

**அநுபல்லவி**

சதுரா நநன் சசி கோன்வட மதுராதிபன் வணங்குந்திரு
(மதுரா)

**சரணம்**

1. யதிராஜராம் இருடித்திருப்
பதி ராஜஸுப் பிரமண்யரைச்
சதிராய்த்திரு வருட்சட்டமாக்
கதிராக்கிமெய்க் குருவாக்கினை ! (மதுரா)

2. நதி வைகையின் கரையின் கணே
மதி மாமுகா ! மலர் மாலையிட்
டதி காலையில் அருட்ஜோதியாய்
எதிர் தோன்றினை ! இருடீசர்முன் (மதுரா)

(மதுரை பரிபூர்ண விநாயகர் கீர்த்தனை முற்றும்)

இடம் :
இரெட்டியப்பட்டிக்கு
பாதயாத்திரை
செல்கையில் பாடியது

**ஸ்ரீ சுவாமி சாதுராம்**
மே/பா ஸ்ரீ வைஷ்ணவி ஆலயம்
வட திருமுல்லைவாயில்
சென்னை-62.

# 1. சமர்ப்பணம்

உலகில் எவ்வளவோ மக்கள் வாழ்கிறார்கள். "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்." என்பது பொதுமறை. ஆனால் எப்படி வாழ்வது என்பது அனைவருக்கும் விளங்குவதில்லை, ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கருத்து விளங்குகிறது. "வையத்துள் வாழவேண்டிய முறை எப்படி?" என்பதை வேதங்கள் கூறுகின்றன; உயர்ந்த அருள் நூல்கள் எல்லாம் பறை சாற்றுகின்றன. பெரியோர்கள் பலர் அருள் வழி காட்டி நடந்து இருக்கிறார்கள், ஒழுகியிருக்கிறார்கள். அவர்களுடைய அருள் ஒழுக்கங்களையும் எல்லோரும் எளிதிலே புரிந்து கொண்டு அவற்றினுள்ள நுட்பங்களையெல்லாம் உணர்ந்து "எப்படி வாழ்க்கையில் மேற்கொள்ள வேண்டும்?' என்பதைத் தெரிந்து கொள்வதும், அதன் வழி நடப்பதும் எளிதல்ல! வாழ் நாள் முழுவதும் ஆராய்ந்தால் கூட வேதங்களிலும், சாஸ்திரங்களிலும் கடல் போல் மலிந்துள்ள அவற்றின் நுட்பங்களை ஆராய்ந்தறிய முடியாது.

நாட்டிலுள்ள ஏழ்மை நிலை, அறியாமை போன்ற எத்தனையோ இன்னல்களுக்கு இடையில் 'வாழ்வது எப்படி'? என்பதை விளக்கத் தெரியாமல், எண்ணற்ற பெரியோர்கள் ஏங்கினார்கள்.

"யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்றார் திருமூலர், "ஏக உருவாய் கிடக்குது ஐயோ இன்புற்றிட நாம் இனி எடுத்த தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாரும் ஜெகத்தீரே" என்றழைத்தனர் தாயுமான அடிகள். திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் திருமணம் செய்து கொண்ட நன் நாளில் "கல்லூர்ப் பெருமணம்" என்று தேவாரம் பாடிய பின்னர், ஒரு ஜோதி தோன்ற, அந்த ஜோதியினுள் திருமணத்திற்கு வந்த அனைவரையும் உடன் அழைத்துச் சென்றனர்.

சமீப காலத்தில் வாழ்ந்த அருட்பெருஞ்ஜோதி வள்ளலார் "கடையை விரித்தோம்; கொள்வாரில்லே; கட்டிவிட்டோம்", என்று கூறிச் சென்றனர். ஆகையால் உலக நிலையை நன்கு உணர்ந்து, எளிய மக்களுக்கும் பேரின்பத்தைப் புகட்டி உடனிருந்து அழைத்துச் செல்லும் அற்புதச் செயலேத் திரு இரெட்டியப்பட்டி சுவாமிகள் மூலமாக ஸ்ரீ பரிபூரண விநாயகர் பூரண அருள் பாலித்த வண்ணம் இன்றும் "வழிகாட்டும் வான்பொருளாக" உள்ளார் என்பதை விளக்கும் இந்நன்னூலே உங்கள் முன் சமர்ப்பிக்கிறேன்.

---

# 2. விநாயகர் தத்துவம்

புதிதாகத்துவக்குகின்ற ஒவ்வொரு செயலுக்கும் விநாயகர் துணை வேண்டும். அவர் அருளுக்கு இலக்காகின்ற செயல் வெற்றி பெறும். விநாயகரை வேண்டிக் கொள்ளாது ஆற்றுகின்ற வினே, விபரீதமாகிவிடும். தடைகள் பல செய்யவும், தடைகளேத் தகர்க்கவும் 'வல்லவர் அவர்,' அதனுலேயே 'விக்கினேசுவரன்' விக்கினராஜா, என்றெல்லாம் அழைக்கப் பெறுகிருர்.

படைத்தல், காத்தல், இவைகளேச் செய்பவர்களுக்கும் எட்டாத பரம் பொருளாகிய சிவபெருமான், கரை கடந்து நிறைந்து நிற்கும் பெருமையை, மகாவிஷ்ணுவிற்கும், பிரம்ம தேவருக்கும் உணர்த்திய சிறப்பையுடையவர். இத்தகைய தலேவன் ஒரு சமயம் திரிபுர அசுரர்களின் அசுரத்தன்மைகள் வளர்ந்து வரும் தருணத்தில், அவர்களே சம்ஹாரம் செய்ய வேண்டுமென்ற கருத்தோடு தேவர்களால் பரிசாகக் கொடுக்கப் பெற்ற மிகச்சிறப்பு வாய்ந்த தேரில், விநாயகரை வழிபடாது புறப்படவே, அதன் விளேவாக 'ஆதி விநாயகர்' தோன்றி அத்தேரின் அச்சை முறித்து விட்டார்.

அதனுல் சிவபெருமான் விநாயகரை வழிப்பட்டதும் தேர் சரியாகி விட்டது, உடனே திரிபுராதிகளை அழித்தார்.

அடிமுடி காண முடியாதவாறு ஜோதிப்பிழம்பாய்த் திகழ்ந்த சிவபெருமானுக்கு விக்னத்தை உண்டாக்கியதைப் போலவே ஸ்ரீ இராவணேசுவரனுக்கும் இன்னல் விளைவித்த கதையும் உண்டு.

அஃதாவது விநாயகரை வழிபடாது இராவணன் கைலேயங்கிரி சென்று, சிவபெருமானை வழிப்பட்டு, ஆத்ம லிங்கத்தைப் பெற்றுத் திரும்புகிருன். இலங்கையிலன்றி வேறிடத்தில் நிறுவினுல் அருள் தன்மை மங்கிவிடும் பெருமையுடையது அது! அதன் நிலையை உணர்ந்த விநாயகர், வருணன் உதவியுடன் இராவணனுக்கு நீர் உபாதை தர, அதனுல் வருந்துகிருன் இராவணன். அது போது விநாயகர் ஒரு சிறுவனுக வர, அவரிடம் அந்த லிங்கத்தைத் தருகிருன். "மூன்று முறை அழைத்தும் வர வில்லையென்ருல் கீழே வைத்து விடுவேன்", என்று நிபந்தனை கூறி அதைப் பெற்றுக் கொள்கிருர். சென்ற அவன், திரும்பு முன்னர், மும்முறை அழைத்து ஆத்மலிங்கத்தைக் கீழே வைத்து விடுகிருர். அவ்விடத்தில் நிலைத்து நின்ற அந்த லிங்கத்தைக் கண்ட ராவணனுக்குச் சீற்றம் உண்டாகி அச்சிறுவனை அடிக்க விரைகிருன். உடனே விநாயகர், சிவபெருமான், உமையவள், முருகர் ஆக சிவ சக்தி சொரூபனுகக் காட்சி தந்து அருள் புரிகிருரெனப் புராணம் கூறுகிறது.

தமையனைத் துதிக்காது, மையல் கொண்டு, வள்ளியைத் திருமணம் புரியச் சென்ற முருகன், கிழவேடம் தாங்கி வள்ளியைச் சந்திக்கிருன். முருகனையே தன் குருவாகவும், கணவனுகவும் எண்ணியிருந்த வள்ளி, அக்கிழவரை வெறுத் துத் தள்ளவே, 'என்ன செய்வது?' என்று புரியாது தவித்த நிலையில் தமையனை நினைத்து "அண்ணு" என்று அபயக் குரல் எழுப்ப, அங்கு மதயானை உருவில் தோன்றிய விநாயகர்

வள்ளியை மலேக்கச் செய்து "வள்ளித்திருக்கல்யாணம்" செய்து வைக்கிறார்.

தமது தும்பிக்கையால் ஔவையை கைலாயத்திற்கு தூக்கிவிட்ட பெருமையும் பிள்ளையாருக்கு உண்டு. அம் மாபெரும் பெருமை கொண்ட விநாயகருக்கு 'கணபதி' என்ற பெயரும் உண்டு. 'கணபதி' என்ற சொல்லுக்கு, இயற்கையின் முறைமையைக் காப்பவன் என்பது பொருள். 'க' என்னும் எழுத்து ஞானத்தை குறிக்கிறது. 'ண' என்னும் அட்சரம் ஆன்மாக்களின் மோட்சத்தைக் குறிக்கிறது. 'பதி' என்பது 'தலைவன்' எனப் பொருள் படுகிறது. ஞானத்திற்கும் மோட்சத்திற்கும் அவனே தலைவன்; அவனே பரப்பிரம்ம சொரூபனுயுமிருக்கிறான். இதுவே விநாயக தத்துவமாகும். மேலும் இத்தத்துவத்தை விளக்க அவர் உருவமே சிறந்த ஒரு சான்றாகும். பூதத்தின் கால்களும், தேவரின் உடலும், மிருகத்தின் தலையும் ஆகமூன்று நிலைகளைச் சேர்ந்ததாகக் கருதற்கு உரியது.

---

# 3. விநாயகப் பெருமானுடைய வடிவங்கள்

விநாயகப் பெருமானை பல்வேறு மதத்தினர் பல மாதிரியாக வழிபடுகின்றனர். பிள்ளையார், மூஷிக வாகனன், ஏக தந்தன், தருண கணபதி, பக்தி விக்கினேசுவரன், பிரசன்ன கணபதி, பிங்கள கணபதி, சக்தி கணபதி, வீரவிக்கினேசுவரன், ஊர்த்துவ கணபதி, சித்தி விநாயகன், பெரிய வீட்டு நாயகன், தும்பிக்கையாழ்வார், என்றெல்லாம் பல நாமங்களில் வணங்கப் பெறுகிறார்.

---

# 4. ஏழை பங்காளன்

'ஹீரம்ப' என்பது விநாயகரின் மறுபெயராகும். 'ஹீ' என்ற எழுத்து திக்கற்ற எளியாரைக் குறிக்கிறது; 'ரம்ப' என்றால் 'ரக்ஷிப்பவன்' என்று பொருள். ஆகையால் திக்கற்ற எளியாருக்கு தலைவன், ஹீரம்ப கணபதியாகும். அவனைச் சரணடையத் தெரிந்து கொள்வோருக்கு அழிவில்லை.

'விநாயகன்' என்பதில் 'வி' என்றால் 'அற்ற' என்றும் 'நாயகன்' என்றால் 'தலைவன்' என்றும் பொருள் படுகிறது. அதாவது 'தனக்கு வேறொரு தலைவன் அற்றவன்' என்பதாகும். இதற்கு 'அருள்திரு' என்றும் "திருவருள்" என்றும் 'பரம் பொருள்' என்றும் பெயர். 'விநாயகன்' என்பது நல்லாரை அறநெறியில் நடத்துபவன்' என்றுமாகிறது. ஏழை மக்களுக்கென்றே அவதரித்த இவனை மக்கள் 'ஏழைபங்காளன்' என்றும் அழைத்து வழிபடுகின்றனர். தெருக்கள் தோறும், ஆற்றோரங்களிலும், அரசமரத்தடியிலும் எளிய முறையில் இருந்து அருள் பாலிக்கிறார்.

---

# 5. ஸ்ரீ மதுரைப் பரிபூர்ண விநாயகர் திரு அவதாரம்

எந்த ஒரு மகானைப் பற்றிய வரலாறு எடுத்துக் கொண்டாலும், குருவடிவிலே திருவருளின் அருள் பெற்ற பிறகே, அவர்கள் பூரணத்துவம் எய்துகின்றனர். எத்தனையோ மகான்களுக்கு 'குருவருளே திருவருள்' என்று காட்டத்தான் எம்பெருமான் தானே குருவடிவமாக மாறி அருள் பாலித்து வருகிறான்.

உதாரணமாகத் திருஞானசம்பந்தருக்குத் தோடுடைய செவியனாகக் காட்சியளித்து ஆட்கொண்டார். திருநாவுக்கரசருக்கு 'திலகவதியார்' என்ற மூர்த்தத்திலே குருவாக

இருந்தார். மாணிக்க வாசகருக்கு குருந்த மரத்தினடியில் 'தக்ஷிணுமூர்த்தி' 'யாகக்காட்சி அளித்து அவரை ஆட்கொண்டார். திருமணக்கோலத்திலிருந்த சுந்தரமூர்த்தி நாயனுருக்கு 'வேதியருய்'த் தோன்றி ஓலை காட்டி திருவெண்ணெய் நல்லூரிலே தடுத்தாட் கொண்டார். அருணகிரிநாதர் கோபுரத்திலிருந்து விழுகையில் முருகன் தோன்றி தன் கரங்களில் தாங்கி, ஞானேபதேசம் செய்து ஆட்கொண்டார். யாராயிருப்பினும் சரி, சிலருக்கு 'குருவடிவிலும், சிலருக்கு சாக்ஷாத் 'தெய்வ' சொரூபத்திலும், ஆண்டவனே வடிவங்கள் மாற்றிக் கொண்டு, குரு அனுக்கிரகம், குருகிருபை, குரு அருள் பாலித்திருக்கும் கதைகள் ஏராளம்.

அந்த வரிசையிலே வந்த ஒருவர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் ஆவர். பெற்றேர் சூட்டிய பெயர் 'சுப்ரமணியம், இவர் கி. பி. 1856 நள ஆண்டு, புரட்டாசி மாதம், இரேவதி நன்னுளில் (16-9-1856) சைவ வேளாளர் மரபில் இப்பூவுலகின் கண் இரெட்டியப்பட்டி என்ற கிராமத்தில் அவதரித்தார். பிறந்தவுடனேயே இவரை 'ஞானி' என்று அவ்வூர் மகான்கள் சொல்லலானுர்கள். 'ஞானி' என்பதற்கு இலக்கணமாகவே அவரும் வளர்ந்தார்.

மதுரையிலே கணக்கராக ஒரு இஸ்லாமியர் கடையில் வாழ்ந்த காலத்தில் நாள் தவருமல் வைகை நதிக்கு விடியற்காலை 3-00 மணிக்குச் சென்று நீராடி விநாயகர் கோயிலை வலம் வருவது வழக்கம். ஒரு நாள் குளித்துவிட்டு கரையேறுகையில் திடீரென்று ஒரு ஜோதிப் பிழம்பு விண்ணுக்கும் மண்ணுக்குமாக அவருக்கு காட்சியளித்தது ! தன்னை மறந்த நிலையில் அதைக் கட்டித் தழுவ எண்ணி சுவாமிகள் முன்னேற, அந்த ஒளியாகிய பேரருட் பிழம்பும் நெருங்கியது. பின்னர் அந்த ஜோதியுள், ஒரு ஜோதி விநாயகர் இருப்பதைக் கண்டார். அந்தவிநாயகர் பின்னர் தம்முடைய கையிலிருந்த அழகான ஒரு பூமாலையை அவருடைய கழுத்திலே சூட்டி, அன்றே அவரை 'திருமாங்கல்ய தாரணம் செய்தது போல அவருக்கு மாலைபோட்டு, மாலை (மாயையைப்) போக்கி, மாலை

யிட்டகழுத்தினராக்கி, "இருடியர்பட்டி அடிகளார்" என்ற ஜீவாத்மாவை பரமாத்மாவாகிய விநாயகர் ஆட்கொண்டார். பின்னர் சுவாமிகள் தன்நிலை உணர்ந்த போது அது ஒரு 'சிலா மூர்த்தம்' ஆகியிருந்ததைக் கண்டார். பின்னர் கழுத்தில் ஒரு மாலையிருப்பதையும் கண்டார்.

---

# 6. "பரிபூர்ணர்" என்ற பெயர்வரக் காரணம்

'இருடியர்பட்டி அடிகளார் கண்ட சிலாமூர்த்தி' யானை முகமும், தொந்தி வயிறும் உடைய விநாயகராகயிருந்தது.

மகா கணபதி என்பவன் பூரணன். அவனே முழுமுதற் பொருளாகிறுன். நிர்க்குண பிரம்மாயிருப்பவனும் அவனே. வேதாந்தம் பகரும் 'சகுணபிரம்மம்' அல்லது 'ஈசுவரன்' மகா கணபதியுருவில் ஒன்றி விடுகிறுன். 'ஓம்' என்னும் பிரணவப் பொருளும் அவனே. 'ஓங்கார மூர்த்தியும்' அவனே. அந்நிலையில் ஓங்கார சிக்ஷையெல்லாம் செய்து 'குரு' என்ற ஸ்தானத்திற்கு இலக்கணமாய் நின்று, அஞ்ஞான இருளைப் போக்கி, மெய்ஞான ஒளியை உண்டாக்கி ஜோதி சொரூபமாகத் திருவண்ணுமலையில் இருக்கும் ஈசுவரனே சாக்ஷாத் விநாயகராக மதுரை வைகைக் கரையில் பரிபூரண நிலையில் காட்சி கொடுத்த காரணத்தாலும், அவரைவிட பரிபூரணம் வேறில்லை என்ற காரணத்தாலும், இதை உணர்ந்த சுவாமிகள் "**பரிபூரண விநாயகர்**" என்று அந்த அர்ச்சாவதாரமாக வீற்றிருக்கும் சிலா மூர்த்திக்குக் காரணப் பெயராக அமைவித்தார்.

"ஓம் பூர்ணமத: பூர்ணமிதம், பூர்ணுத் பூர்ணம்
உதச்யதே,
பூர்ணஸ்ய, பூர்ணம் ஆதாய பூர்ணமேய, அவஸிஷ்யதே"

பூர்ண சொரூபத்திலிருந்து சர்வமும் உண்டாயிற்று. அந்தப் பூர்ணத்திலிருந்து சர்வமும் வெளிப்பட்டுத் தோன்றுகிறது. பின்னும் பூர்ண சொரூபம் அப்படியே குறைவின்றி முழுமையாய் எஞ்சி நிற்கிறது. அங்கும் பூர்ணம்; இங்கும் பூர்ணம். அந்தப் பூர்ணப் பொருளை வணங்குவோமாக என்று பொருள் படும்.

ஒரு அகல் விளக்கு எரிகிறது. அதிலிருந்து ஆயிரக் கணக்கான அகல் விளக்குகளையும் பொருத்திவைக்கலாம். அதே சமயம் மூல விளக்கின் மகத்துவமும் பிரகாசமும் குறைவதில்லையே! பரிபூர்ண மாகத்தான் இருக்கும். குழந்தைக்கு பாதி லட்டு கொடுத்தால் வாங்குமா? அதையே முழுமையாக உருண்டை செய்து கொடுத்துப் பாருங்கள் தெரியும். ஆகையால் குழந்தையும் பூரணத்தையேவிரும்புகிறது. ஆகையால் பரிபூர்ண விநாயகர் என்ற திருப் பெயர் சுவாமிகள் மிக அழகாகச் சூட்டினர். வைகைக்கரையில் காட்சி கொடுத்த தால் "திரு மதுரை பரிபூரண விநாயகர்" என்று பெயர் அமைவதற்கு காரணம் ஆயிற்று.

---

# 7. ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளை ஆட்கொள்ளல்

"சற்குருவாய், சேய்போல் கருதி
எனையாண்ட கணபதி"

என்று சுவாமிகள் அருளிய அருள்வாக்கின்படி மேற்படி கருத்தைக் கீழ்காணும் முறையில் அறிய ஏதுவாகிறது.

விண்ணுக்கும் மண்ணுக்கும் ஜோதிவடிவாக திருவண்ணமலையில் விளங்கும் சிவபெருமானுடைய குழந்தை சாக்ஷாத் விநாயகர் இம்மதுரைமா நகரிலே வைகைநதி ஓரத்திலே பெருஞ்ஜோதியாக ஆகாயத்திற்கும், பூமிக்கும் விசுவரூபம் எடுத்து இருடியர்பட்டி அடிகளாருக்குக் காட்சியளித்து

அவரை ஆட்கொண்டு மாலைப் போக்கி, மாலையிட்ட கழுத்தினராய் அவரை மாற்றித் திருவருள் பாலித்து, குரு அருளையும் கூடயிருந்து கொடுத்து சிலாமூர்த்தமாக மாறினர். இன்றும் தோன்றாத் துணையாக எல்லா அடியார்களையும் ஆட் கொண்டு அவரவர்களின் பக்குவத்திற்கு ஏற்ப, அருள் பாலித்து என்றும் வழிகாட்டும் வான்பொருளாக விளங்குகிறார். மேலும் எப்படி வந்து ஆட்கொண்டாராம். குருவாய் வந்து ஆட்கொண்டராம்.

---

## 8. ஸ்ரீ பரிபூர்ணருக்குத் திருக்கோயிலமைத்தல்



திருவாகவும், குருவாகவும் இருந்து அருள் பாலித்த ஸ்ரீ பரிபூரணருக்கு இருடியர்ப்பட்டி அடிகளார் அவ்விடத்திலேயே தம்மோடு வழிபட்டு வரும் அடியார்களைக் கொண்டு திருக்கோயிலமைத்து தம் திருக்கரத்தால் ஓர் நன்னாளில் திருக்குட முழுக் காட்டினர்.



" மதுராபுரி வடக்காய் வைகைநதித் தென்பாற்
சதுரார் ரயில் பாலந் தென்மேற்கா யெங்குங்
கதித்தோங்குஞ் செந்நெல் சூழ் கட்டிடத்தின் கீழ்பால்
உதித்தாய் யென்னுள்ளத் துறை"

என்று சுவாமிகள், தாம் கட்டுவித்த கோயிலுக்கு நான்கு திக்கிலும் எல்லை வகுத்து அதில் உறையும் பெருமானை வழிப்பட்டார். மேலும்,

" இராச விருட் சஞ்சிவமா யின்வேம்பு சத்திய தாய்
ஆசையுடன் வந்தே யமைந்து வெகு-நேசமுடன்
புத்திரனைப் பெற்றுரிப் பூதலத்தில் எல்லோரும்
முத்தி பெற வென்றே முதல்"

என்று அப்பெருமானின் பெருமையையும், கருணையையும் தம் அருட் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

# 9. என்றும் குருவாகவும் திருவாகவும் அருளுதல்

"ஞால முண்டவன் மெய்ஞானி வேண்டுவ தெல்லாம்
தலைமிசை சுமப்பன்
ஆலமுண்டவன் தலைமிசை வையென அவன் பின்னே
திரிகுவன்

அவன் அடித்துகட்கு அன்றோ,
சீல மன்னரும் மற்றுள தேவரும் திசை திசை
தொழுது ஏத்தக்—காலிரண்டையும்
தலைமிசை வையெனக் கழறுவன் கமலத்தோன்"

என்று 'ரிபுகீதை' கூறுகிறது. அப்படிப்பட்ட திருவடியைத் திருமேனியில் (மனமாகியமலர் கமலத்தில்) தாங்கி நிற்கும் குரு பெருமானுனவன் தானே திருவாகவும் குருவாகவும் எளியவர் களுக்குக் கூடவேயிருந்து அருள்பாலித்து பரப்பிரம்ம சொரூப மாகிய திருவடியைக் காட்டிக் கொடுப்பர். தாயார், தந்தை யைக், காட்டிக் கொடுப்பதுபோல், குரு பெருமான் தாயா யிருந்து, தந்தையாயிருக்கும் திருவருளைக் காட்டிக் கொடுக் கும் தன்மை படைத்தவர்கள் குரு மகான்கள், தேவர்களுக் கும் மூவர்களுக்கும் எட்டாத, திருவடியைக்காண அவாமிகுதி யினுல் அலையும் வேளையில் ஞானிகளையும் தொண்டர்களையும் காண வாய்க்குமேயாமாகில் அவர்கள் உள்ளத்தில் உறையும் திருவடித் தாமரைகளைச் சேவிக்கும் பொருட்டு 'குருவும் திருவும்,' ஒன்று என்ற நிலை வருகிறது. அப்படிப்பட்ட குருவடிகளைத் தலைமேல் சுமக்க எண்ணி மூவர்கள் அவன் பின்னே திரிவர். எவன் பின்னே? குருமகான்களின் பின்னே திரிந்து, அலைந்து, அத்தொண்டர்களுக்கு அடக்க மாவர், என்று இப்பாட்டிற்கு பொருளாம்.

எப்படி சூரியனிடத்திலிருந்து தோன்றிய சந்திரன் அதனிடமிருந்து பகலில் ஒளியைப் பெற்று இரவில் பிரகாசித்து இருளைப் போக்குகிறதோ அதுபோல கோடி

சூரிய பிரகாசமாகிய பரிபூரண விநாயகருடைய பிள்ளையாகிய இருடியர்பட்டி அடிகளார் சந்திரனாக இருந்து பரிபூரணரிடமிருந்து அருள் ஒளியைப் பெற்று மக்களிடத்திலுள்ள அஞ்ஞான இருளைப் போக்கி, மெய்ஞானத்தைக் காட்டி, திருவேறில்லை, குருவேறில்லை குருவே திருவாகும் என்று சிவசக்தி மயமாக என்றும் நமக்கு அருள் பாலிக்கிறார். 'கு' என்ற எழுத்தினால் இருள் என்றும், 'ரு' என்ற எழுத்தினால் போக்குபவன் என்றும், 'குரு' என்ற சொல்லால் அக்ஞான இருளைப் போக்கி மெய்ஞானமாகிய பரஞானத்தைக் கொடுப்பவன் என்று பொருள். ஆகையால் ஸ்ரீ பரிபூரணரும், இரெட்டியப்பட்டி சுவாமிகளும் என்றும் குருவாகவும், திருவாகவும் நமக்கு விளங்குகிறார்கள் என்பதில் ஐயமில்லை.

---

# 10. ஸ்ரீ பரிபூர்ண விநாயகரும் அருட்சட்டமும்

இருடியர்பட்டி அடிகளாருக்கு குரு வாயிருக்கும் ஸ்ரீ பரிபூரண விநாயகர் நமக்கெல்லாம் திருவாயிருந்து கொண்டு நமக்கு குருவாய் இருக்கும் இருடியர்பட்டி அடிகளார் மூலமாக உலகின் கண் வாழும் உயிர்களை இப்பிறவியிலேயே "வாழ்வாங்கு வாழ்ந்து பிறவிப் பெறும் பயனை எளிதிலே அடையும்படி (உய்விக்கும் பொருட்டு) சில அருட்சட்ட திட்டங்களை வகுத்து அருளியுள்ளார். அவை எல்லா நாட்டினரும், எல்லா மொழியினரும், எல்லா இனத்தவரும், எல்லா மதத்தினரும் எக்காலத்திலும், எவ்விதத் தடையுமின்றி, எவ்வித வேறுபாடுமின்றி அனுஷ்டிப்பதற்கேற்ப இயற்கையோடு கலந்த ஒரு செந்நெறியை இங்கே காணலாம்.

1. காலை 4-00 மணிக்குப் பச்சை நீரில் தலை நனைய முழுகுதல்.

2. பிறகு ஐந்து நிமிடம் நிஷ்ட்டை செய்தல்.

3. வெள்ளிக்கிழமை ஒரு வேளை விரதம் இருத்தல்.

4. வெந்நீர் ஸ்ஞனபானம் மருந்தை தள்ளிவிடல்.

5. நோயுற்ற காலை இருவேளை பச்சை நீரில் முழுகுதல் புலால், லாகிரி வஸ்துக்கள் தள்ளிவிடல். இன்ப துன்பங் களுக்கு இறைவனை சரணடையத் தெரிந்து கொண்டு அதன்படி உடல் பொருள் ஆவி மூன்றையும் இறைவனிடம் ஒப்புவித்தல்.

---

# 11. பூஜிக்கும் வழி

இத்தகைய பெருமைக்குரிய இப்பெருமானை நினைத்து வழிபடவே நமது நாட்டில் தொன்று தொட்டு ஆண்டு தோறும் ஆவணி மாதத்தில் ஓர் நாள் 'விநாயக சதுர்த்தி' என்ற பண்டிகையைக் கொண்டாடுவது வழக்கம். இதை முக்கியமாகக் குழந்தைகள், வறியவர்கள், எளியவர்கள், அருளாளர்கள், மெய்ஞானிகள், அடியார்கள், பெற்றோர்கள், முதியோர்கள், வலியோர்கள் ஆகிய எல்லோருமே மனத்தால் 'ஏகமாகி' நித்திய பிரம்மச்சாரி, என்ற பெருமையுடைய அப்பெருமானை வழிபடுவது வழக்கம். இந்நன் நாளில் விநாயகரை மண்ணில் பிடித்து, அவல், பொரி, அப்பம், கொழுக்கட்டை, சுண்டல், கனிவகைகளுடன் படைத்து சிறுவர்களுக்குப் பகிர்ந்து வழிபடுவது வழக்கம். நல்லுணவு படைத்து, நல்லாரை மகிழ்விப்பதே 'கணபதி பூஜை யாகும்'

அதிகாலையில் வீட்டு வாயிலில் சாணத்தில் பிள்ளையார் பிடித்தும் வழிபடுகின்றனர். அதுமட்டுமன்றி அரிசிமாவும் மஞ்சள் முதலியவற்றிலும் உருவாக்கி வழிபடுகின்றனர். வேறு வழியில்லாத காலத்திலும் 'அருகம்புல்' அவனுக்கு அறி குறியாக வந்து நிற்கும். இங்ஙனம் விநாயகர் பூஜை யாவ ருக்கும் எளிய முறையில் அமைந்துள்ளது.

சுவாமிகள் மீதும், பரிபூரண விநாயகர் மீதும் அடியவர்கள் 'அன்பர்கள் பாடிய பாடல்கள் நிறைய உள்ளன. இவற்றில் பல அச்சாகி வெளிவந்துள்ளன. இன்னும் பல அச்சாகி வெளிவராமலும் உள்ளன. இன்னும் பல அடியவர்கள் புதிதாகப் பாடிக் கொண்டும் உள்ளனர்.

ஆண்டவர் பாடல்கள், அருள் விளக்கங்கள், அருட்சட்ட உண்மைகள், அற்புத நிகழ்ச்சிகள், அடியவர் பாடல்கள் முதலியவற்றை அச்சிட்டு வெளிப்படுத்தியும், ஆங்காங்கு பல உள்ளூர் வெளியூர் கூட்டங்களை நடத்தி அதன் மூலம் பிரசாரம் செய்தும், மற்றும் பல துறைகளிலும் சுவாமிகளின் செந்நெறியின் சிறப்பைப் பலரும் நன்கு அறிந்து பயன் பெறச் செய்யும் வகையில் *16-5-1971*ல் ஸ்ரீ இரெட்டியபட்டி சுவாமிகள் இலக்கியப்பதிப்பகம், சென்னை மாநகரில், கோவிந்தப்ப நாயக்கன் தெரு எண் 32ல் உள்ள அடியார்கள் இல்லத்தில், தமிழக மின்வாரியச் செயலர் உயர் திரு R. ஷண்முக சிகாமணி M.A, தற்போது (I.A.S.) அவர்கள் தலைமையில், ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கத் தலைவர் செந்தமிழ் விளக்க வள்ளலார், 'ஆட்சிச் சொற்காவலர்', 'சாந்தசீலர்' உயர் தவத்திரு கீ. இராமலிங்கனூர் M.A. அவர்களால் துவக்கப் பெற்று பணியாற்றி வருகிறது.

ஸ்ரீ பரிபூரண விநாயகர் வரலாறு முற்றிற்று.

சுபம்

## இரெட்டியப்பட்டி திருக்கோயில்

**திரு இரெட்டியப்பட்டி என்ற திருத்தலம் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள விளாத்திக் குளம் தாலூகாவைச் சேர்ந்த நாகலாபுரத்தை அடுத்துள்ளது. மதுரையிலிருந்து (52 மைல்) அருப்புக் கோட்டை, புதூர் பஸ் மார்க்கமாக சென்றால் நாகலாபுரம் இரெட்டியப்பட்டியை அடையலாம்.**

அருள் வளர்ச்சி நாடும் பலரும் இப்பதிப்பகத்தில், ஆண்டு உறுப்பினர், ஆயுள் உறுப்பினர், புரவலர் முதலிய பல வகைகளில் பங்கு கொண்டு உதவி புரிந்தும், பொருள், பணி, எண்ணம், உரை முதலிய வகைகளில் ஒல்லுந்தனையும் உதவி ஊக்கியும் எல்லாம் வல்ல ஸ்ரீ குரு பரம்பொருளின் அருட் பெருங் கருணை மேன்மேலும் பெற்றுய்யக் கோரலாகிறது.

ஆண்டு சந்தா ரூ. 6 ஆயுள் உறுப்பினர் ரூ. 100

புரவலர் நன்கொடை ரூ. 1000

**இப்பதிப்பகத்தின் நோக்கங்கள் அருட்பிரசாதம் என்ற புத்தகத்தில் உள்ளது.**

விபரங்கட்கு : ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம், 32, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை-1 தொலைபேசி : 3 4 6 0 0

## எமது புத்தக வெளியீடுகள் :—

| | | | |
|---|---|---|---|
| 1. | அனுக்ரஹ பிரஸாதம் (தெலுங்கு) — | 0 | 10 |
| 2. | அருட் பிரசாதம் | 0 | 10 |
| 3, | குரு அருள்திரு உந்தியார் | 0 | 15 |
| 4. | மதுரை ஸ்ரீ பரிபூர்ண விநாயகர் வரலாறு | 0 | 25 |
| 5. | பேரின்ப வேட்கை | 0 | 50 |
| 6. | இரட்டையர்ப் பட்டி அடிகள் இரட்டைத்துதிப்பா மலர்கள் | 0 | 50 |
| 7. | இருடியர்ப்பட்டி குருநாதர் பிள்ளைத்தமிழ் | | |
| | மெல்லட்டை | 1 | 10 |
| | வல்லட்டை | 1 | 60 |
| 8. | The kindly light that Leads | 0 | 75 |